

# மழைநாளின் போது

ஒரு வார கால மழைக்குப் பிறகு வானம் சற்று வெளுத்திருந்தது. வீட்டில் ஏகப்பட்ட ஈரத்துணி. அந்த இடத்தின் ஒரே அறையில் அவளுக்கு முடிந்த அளவுக்கு ஒரு நைலான் கயிற்றைக் குறுக்கும் நெடுக்குமாகக் கட்டி அவன் மனைவி துணிகளைப் பிரித்து உலர்த்தியிருந்தாள். வீட்டுக்குள்ளேயே ஈரப்பதம் எவ்வளவு என்று யாராவது அளந்து பார்த்தால் 100 சதவீதம் இருக்கும்.

உலர்த்தியிருந்த ஒரு வேஷ்டியின் ஒரு நுனியில் தண்ணீர் திரண்டு சொட்டத் தயாராக இருந்தது. சற்று கவனித்துப் பார்த்ததில் எல்லாத் துணிகளுமே அந்த நிலையில்தான் இருந்தன. அவனுடைய மனைவியின் பாவாடை நாடாவிலிருந்து ஏற்கெனவே தண்ணீர் கீழே சொட்டித் தரையில் ஒரு சிறு குட்டையாக மாறியிருந்தது.

அவன் அந்த அறையின் சமையல் பகுதிக்குச் சென்று ஒரு பாத்திரத்தை எடுத்து வந்தான். அவனுடைய மனைவி சமையல் முடித்து எல்லாவற்றையும் மூடி ஒரு மூலையில் அடுக்கி வைத்திருந்தாள். அன்று அவர்களுடைய ரேஷன் தினம். கையில் பைகள், மண்ணெண்ணெய் டின், ரேஷன் அட்டை, நோட்டு, சில்லறை, ஒரு குடையுடன் அவனுடைய மனைவி ரேஷன்கடை முன்னால் வெறுங்காலுடன் நின்று கொண்டிருப்பாள். அவனும் இன்னும் சிறிது நேரத்துக்குப் பின் அவள் வாங்கின பொருள்களில் சிலவற்றை யாவது எடுத்துவரக் கடைக்குப் போக வேண்டும்.

அவன் எடுத்து வந்த பாத்திரம் அவர்கள் வீட்டில் பால் காய்ச்சும் குக்கர். அதை எடுத்து வந்து கொடியில் தொங்க வீட்டிருந்த ஒவ்வொரு துணியின் அடிப்பாகத்தையும் பிழிந்து, துணியிலிருந்த அதிகப்படி தண்ணீரைக் கீழே சொட்ட விடாமல் சேகரித்தான். ஜிப்பா, வேஷ்டி, பாவாடை, பனியன் இதெல்லாம் அழுத்திப் பிழிவதில் தயக்கமேதும் ஏற்படவில்லை. நடுநடுவே அவளுடைய ஜாக்கெட் பாடிகளும் தட்டுப்பட்ட போது கை

சிறிது சுணக்கம் கண்டது. ஒரு பாடியின் நுனியை அழுத்திப் பிழிந்த போது ஒரு கொக்கி கையைக் குத்தியது. அந்தப் பாடியில் நான்கு கொக்கிகள் இருந்திருக்க வேண்டும். இப்போது இரண்டு தான் இருந்தன. அவளுடைய எல்லாத் துணிகளுமே பழமை தெரியத்தான் இருந்தன. பிற துணிகளைவிடச் சுத்தமாகவும் வெளுப்பாகவும் இருந்தால் கூட நீண்ட கால உபயோகத்தால் பெற்றிருக்கும் மங்கல் நிறத்தை அவை தவிர்க்க முடியவில்லை.

ஒரு காலத்தில் அப்படியில்லை. தோய்த்து உலர்த்திய துணி தான் என்றாலும் அவள் எப்போதுமே புதுத் துணியே அணிந்து கொள்வது போலத்தான் தோற்றம் அளிப்பாள். இரண்டு மூன்று குழந்தைகளுக்குப் பிறகு கூட அவளுடைய துணிகள் பழைய துணி போலக் காட்சியளிக்காது. உள்ளணிகள் விஷயத்தில் ஆண்களை விடப் பெண்கள் சற்றுக் கூடுதலான அக்கறையோடுதான் இருக்கி றார்கள். இது ஒரு காலத்தில் அவன் கவனத்துக்கு எட்டியிருக்கிறது. எவ்வளவோ ஆயிரக்கணக்கான விஷயங்களைப் போல இதுவும் அவன் கவனத்தை விட்டுக் கழன்றும் போயிருக்கிறது. இப்போது ஏறக்குறைய அவனுடைய துணிகளின் நிறத்தில் அவளுடையதும் கொடியில் உலர்வதற்காகத் தொங்கும் போதுதான் ஒரு காலத்தில் அவன் இவ்விஷயங்களைக் கவனித்தது கவனத்துக்கு வருகிறது.

மூன்று குழந்தைகள். சிறு குழந்தைகளுக்கு அணிவதற்கு விசேஷமாகத் துணிகள் வேண்டாமென்றாலும் குழந்தைகள் காரணமாக நிறையவே துணி தேவைப்படுகிறது. அவனுடைய வேஷ்டிகளே பலமுறை இரண்டாகவும் நான்காகவும் கிழிக்கப் பட்டிருக்கின்றன. அது போலவே அவளுடைய புடவைகளும். குழந்தையைக் கீழே படுக்கப் போடுவதற்குத் துணி விரிக்கும் போதுகூட அவனுடைய வேஷ்டி மங்கலாகவும் பழைமை தெரிவது மாகவே இருந்தது. அவளுடைய புடவை புதியது போல விளங்கும். எல்லாத் துணிகளுக்கும் ஒரே சோப்புதான். அவன் தன் துணி களுக்கு சோப்புப் போட்டு அலசி உலர்த்திய பிறகு தான் அவளுக்கு அவள் துணிகளைக் கவனிக்க நேரம் ஒழியும். அவளுடை யதைவிட வலுவான கைகளால் கசக்கிப் பிழிந்திருந்தும் கூட அவனுடைய வேஷ்டி துணிமணிகள் இரண்டே மாதத்தில் பழை— யதாகிப் போய்விடும். அவளுடையது என்றுமே புதுக்கருக்கு குலையாமல் இருக்கும். அந்த நாட்களில் அவன் சில சமயங்களில் இதைப் பற்றி வியந்தது கூட உண்டு. இப்போது அவளுடையதும் அவனுடையதைப் போலாகிவிட்டன.

குக்கரில் கிட்டத்தட்டப் பாதியளவு நீர் சேர்ந்திருந்தது. இப்போதெல்லாம் அவளால் துணிகளை அழுந்தப் பிழிய முடிய

வில்லை. வயது முகத்தில்தான் தெரியும் என்றில்லை. முகத்தைவிடக் கை கால்களில்தான் காலம் திட்டவட்டமாகச் சுவடுகள் ஏற்படுத்திச் செல்கிறது. கைகள் சோர்ந்துப் போகப் போகத்தான் வாழ்க்கைப் பொறுப்புகளும் கவலைகளும் வேலைகளும் கூடிக் கொண்டே போகின்றன. முகத்துக்கு நாற்பது வயதாகும் போது கைக்கு அறுபது வயதாகிவிடுகிறது. உண்மையிலே ஒருவருக்கு மொத்தமாக ஒரே வயதென்று ஏதோ சொல்வது சரியேயில்லை. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாகமும் வெவ்வேறு வயதுகளை அடைகின்றன. அதனால்தான், பாவம், இவ்வளவு ஈரத் துணிகளை இவ்வளவு ஈரத்துடன் அவளால் உலர்த்திப் போட வேண்டியிருக்கிறது.

பால் குக்கரில் சேர்ந்திருந்த தண்ணீரைக் கீழே கொட்டிவிட்டு அதை ஒருமுறைக்கு இருமுறையாகக் கழுவினாள். துணி பிழிந்த தண்ணீரில் என்னென்ன அமிலங்கள், சுண்ணாம்பு, உப்புகள் இருக்கிறதென்று யார் கூற முடியும்? இந்தக் காலத்தில் எப்படி எப்படியெல்லாமோ சோப்புகள் தயாரித்து விடுகிறார்கள். முன்பெல்லாம் துணிக்குச் சோப்பு போட்டால் கையைவலிக்கலாம். ஆனால் இப்போதெல்லாம் சோப்புகள் கைத்தோலையே உரிந்து போகும்படி செய்து விடுகின்றன. ஒவ்வொருமுறை விலைவாசி அதிகரிக்கும்போது முந்தையதைவிட மட்டமான சோப்பைத்தான் வாங்கிவர வேண்டியிருக்கிறது. துணிக்கு சோப்பு தேய்க்கும் வேலை மிச்சமாகும் என்று தூளாக விற்கும் டிடர்ஜண்டுகளை வாங்கிப் பார்த்தாகிவிட்டது. இவை கையை இன்னும் அதிகமாகவே தோலுரியச் செய்தன. அது மட்டும் இல்லை. அலசுவதற்கு இரண்டு மூன்றுமடங்கு தண்ணீர் தேவைப்பட்டது. தண்ணீர் எங்கே பாடுபடாமல் கிடைக்கிறது? ஆதலால் மீண்டும் சோப்புக் கட்டிகள்தான்.

குழந்தைகள் இப்போது பெரியவர்களாகிவிட்டார்கள். அவர்களே குளித்து அவர்களே புத்தகப் பைகளையும் சோற்று டப்பாக்களையும் எடுத்துச் செல்கிறார்கள். ஒரு காலத்தில் அதற்கும் அவன் மனைவிதான் தேவைப்பட்டது. குழந்தைகளைக் கையைப் பிடித்து, சாலையைக் கடந்து, பள்ளியில் கொண்டு சேர்க்க வேண்டும். ஒரே பள்ளியில் மூவருக்கும் இடம் கிடைக்கவில்லை. முதல் பையன் ஒரு பள்ளி, அடுத்த மகன், மகளுக்கு இன்னொரு பள்ளி. உணவு இடைவேளையின் போது முதலில் பெரிய பையனுக்கு உணவு கொடுத்துவிட்டு இன்னொரு பள்ளிக்கு மற்ற குழந்தைகளுக்குமாக ஓட வேண்டும். அந்தக் குழந்தைகள் சாப்பிட்டு முடித்தவுடன் மீண்டும் முதல் பள்ளிக்குச் சென்று பெரியவன் சாப்பிட்டு முடித்த

டப்பாவையும் கூடையையும் சேர்த்துப் போட்டுக்கொண்டு வீடு திரும்பிய உடனேயே பால் அட்டையைத் தூக்கிக் கொண்டு பால் வாங்குவதற்குப் போக வேண்டும்.

பால் தினமும் ஒரே வேளையில் வருமென்று சொல்ல முடியாது. சில நாட்கள் காத்திருக்க வேண்டும். பால் வண்டி நடுவில் எங்காவது நின்று போய் மிகவும் தாமதித்து வருவதா யிருந்தால் அவள் வீட்டுக்கு வந்து மீண்டும் இன்னொரு முறை பாலை வாங்கிவரப் போக வேண்டும். இப்போது குழந்தைகள் அவர்களே சாப்பாட்டு மூட்டையையும் தூக்கிப் போகிறார்கள். அந்த ஒரு வேலை மிச்சம். ஆனால் அந்த நிலை வருவதற்குள் வேறு சிரமங்கள் வந்துவிடுகின்றன. முன்போல அவ்வளவு விரை வாக அவளால் நடக்க முடியவில்லை. முழங்காலில் வலி வந்து விடுகிறது. போதாதற்கு மழை நாட்களில் கால் விரல்களுக் கிடையில் சேற்றுப்புண். இப்போதும் சேற்றுப் புண்ணோடுதான் ரேஷன் கடை முன்னால் நின்று கொண்டிருப்பாள்.

மணி இன்னும் ஒன்பதரையாகவில்லை. ஒரு காலத்தில் ரேஷன் கடைகளை ஏழு மணிக்கே திறந்து கொண்டிருந்தார்கள். எவ்வளவு கும்பலிருந்தாலும் எட்டு எட்டரை மணிக்கு வீடு திரும்பி விடலாம். இப்போது எட்டு மணிக்குத்தான் திறக்கிறார்கள்.

ரேஷன் அட்டையைப் பார்த்து பில் எழுதுவதற்கு ஒருவர், பணம் வாங்கிக்கொள்ள இன்னொருவர். அதன்பிறகு கடைக்குள் சென்று சாமான்களை வாங்க வேண்டும். அதிலும் அரிசி கோதுமை ஓரிடம், இதர பொருள்கள் இன்னோரிடம். ரேஷன் கடையே மிகவும் சிறிய இடம். அவ்வளவு சிறிய இடத்தில் மிகக் குறைந்த பேர் வாங்க வந்தால்கூட ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக் கொண்டு போவதைத் தவிர்க்க முடியாது. அதற்காக வென்றே வீட்டுப் பெண்களை ரேஷன் கடைக்கு விரட்ட வேண்டி யிருக்கிறது. அவனுடைய மனைவியும் இந்த இடித்துத் தள்ளுதலுக்கு உட்பட்டு, அவளும் இடித்துத் தள்ளித்தான் பொருள்களை வாங்கி வரவேண்டும்.

பல சமயங்களில் அவனுடைய குழந்தைகளும் ரேஷன் கடைக்குப் போயிருக்கிறார்கள். அவர்கள் முதலில் சென்று நின்ற இடம் எட்டாவதாக இருந்தாலும் அவர்கள் வாங்கி வரும் முறை பதினெட்டாவதாக மாறிவிடும். வாங்கிவரும் பொருள்களும் எடை சரியிராது. ஒரு முறை ரேஷன் குமாஸ்தாவாகவே ஏகப்பட்ட மைதாவுக்குப் பில் போட்டு அன்று வாங்கி வந்த மைதாவை மாதக் கணக்கில் பாதுகாத்துப் பயன்படுத்தினார்கள். மைதாமா

வுக்கு வண்டு வருவது போல வேறு எந்தப் பொருளுக்கும் வராது. மூடியை எவ்வளவு கெட்டியாக மூடி வைத்திருந்தாலும் மாவின் பட்டுப் போன்ற மேற்பரப்பில் புள்ளி புள்ளியாகக் காணப்படும். அவை புள்ளிகள் அல்ல. மாவின் பரப்பைத் துளைத்து வண்டு சென்றிருப்பதற்கு அடையாளமான துவாரங்கள். ஒவ்வொரு முறையும் மாவைப் பயன்படுத்தும் முன்பும் பிடிப்பிடியாக அதை வெளியில் எடுத்து மெல்லிய சல்லடையில் சலிக்க வேண்டும். ஒவ்வோர் பிடியிலும் பத்துப் பதினைந்து வண்டுகள். இவ்வளவு சிறிய வண்டுகளுக்கு வயிறு இன்னும் சிறியதாகத்தான் இருக்க வேண்டும். அந்த வயிற்றை நிரப்ப அவை வீட்டில் எங்கே எந்த மூலையில் மைதாமாவு வைத்திருக்கிறதென்று தெரிந்து கொண்டு அவை படைக்கப்பட்ட பணியைத் தொடரச் செல்ல வேண்டும். இந்த வண்டு சர்க்கரைக்கு வருவதில்லை. மைதாவுக்கு மட்டுந்தான். வண்டு அதன் படைப்புக்குரிய தர்மத்தை மீறுவதில்லை.

சரியாக ஒன்பதரை மணிக்கு அவன் வீட்டைப் பூட்டிக் கொண்டு வெளியே கிளம்பினான். மழை ஓரிரண்டு தூறல் போட்டுக் கொண்டிருந்தது. வீட்டிலிருந்த மூன்று குடைகளில் இரண்டைக் குழந்தைகள் எடுத்துப் போயிருந்தார்கள். குழந்தைகள் என்ன? எல்லாம் பத்து வயதைக் கடந்தாகிவிட்டது. இப்போ தெல்லாம் பத்து வயதிலேயே நிறையக் கவலைகளும் பொறுப்புகளும் வந்து விடுகின்றன. அந்தக் கவலைகளையும் பொறுப்புகளையும் அவர்கள் பெற்றோர்களிடம் கூடப் பகிர்ந்து கொள்ள முடியாது. பெற்றோர்களுக்கு அதற்கு எங்கு நேரம் இருக்கிறது? நேரம் இருந்தாலும் அவற்றைத் தீர்க்க எங்கே சக்தி இருக்கிறது? இரகசியமாகக் குழந்தைகளிடம் பச்சாத்தாபம் மேலிட்டு யாரும் அறியாமல் மனத்தை வருத்திக் கொள்வதற்கு மேல் வேறென்ன செய்ய முடிகிறது? இப்போதெல்லாம் பள்ளி ஆசிரியர்களுக்கு குழந்தைகளின் பெற்றோர்கள் ஒரு பொருட்டேயில்லை.

அவன் மகள் முந்தைய இரவெல்லாம் தூக்கத்தில் புலம்பிக் கொண்டேயிருந்தாள். ‘என்ன ஆயிற்று இங்கு?’ என்று பள்ளியில் கேட்கப் போனபோது ஏழெட்டு ஆசிரியர்களாகச் சேர்ந்து கொண்டு, அவனிடம் சண்டைக்கு வந்து விட்டார்கள். அந்த உலகிலேயே மிகப் பெரிய போக்கிரிப் பெண் அவன் மகள்தான் என்று ஒருவர்போல எல்லாரும் சாதித்தார்கள். அவன் மகள் அவர்கள் முன்னால் சிறு ஆட்டிக்குட்டி போல இருந்தாள். இந்த ஆட்டு குட்டியால் அவ்வளவு பெரிய, அவ்வளவு சாமர்த்தியம் வாய்ந்த, அவ்வளவு அநுபவம் பெற்ற பெண்மணிகளுக்கு எவ்வளவு தொந்தரவு வந்துவிடும் என்று அவனால் ஊகிக்க முடியவில்லை.

அதன் பிறகு அவன் மகளுக்குக் காலை வேளையில் முகம் எப்போதும் பேய் அறைந்த மாதிரி இருக்கும். பல நாட்களில் காலை வேளையில் சுரமடிப்பது போலவும் இருக்கும். ஒருநாள் சுரத்துடன்தான் பள்ளியிலிருந்து வீடு வந்தாள். ஒரு மாதம் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. அடுத்த வகுப்புக்குப் போனதும் காலைச் சுரம் வரவில்லை. ஆனால் இரவில் தூக்கத்தில் அலறுவது மட்டும் நிற்கவில்லை.

ரேஷன் கடையில் அவளுடைய மனைவி அட்டையைக் காண்பித்துப் பில் போட்டு விட்டாள். அன்று கடையில் ரவா இல்லை, பாமாயில் இல்லை, மண்ணெண்ணெய் இல்லை. அரிசியும் சர்க்கரையும்தான். மைதாமாவு இருக்கிறது. ஆனால் அன்று எப்போதோ குழந்தைகள் வாங்கி வந்த மைதாமாவு இன்னும் இருக்கிறது. ஆயிரக்கணக்கான மர்ம வண்டுகளுக்குச் சுவர்க்கமாக.

அரிசிப் பையையும் குடையையும் எடுத்துக் கொண்டு அவன் முன்னே போக அவனுடைய மனைவி சர்க்கரையையும் காலி மண்ணெண்ணெய் டின்னையும் எடுத்த வண்ணம் பின்னால் வந்து கொண்டிருந்தாள். தூறல் சற்று அதிகமாக, அவன் நின்று அவளையும் குடைக்கடியில் வரும்படி பார்த்துக் கொண்டான்.

"மணி பத்திருக்குமா?" என்று அவள் கேட்டாள்.

"இருக்கும்."

"ஆபீஸுக்குப் போக நேரமாகலே? சாப்பிட்டாச்சா?"

"கால்மணி அரைமணி தாமதமாய்ப் போனால் போச்சு. நேத்திக்குப் பாதி பேருக்கு மேலே ஆபீஸுக்கு வரவேயில்லே."

"ராத்திரிக்குத்தான் மழை விடவேயில்லையே?"

அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் ஈரத்தின் நெடி மூச்சையடைத்தது. அவன் குடையை மடித்து வாசல் படியருகில் தலை கீழாக வைத்தான். அவள் சர்க்கரையை இரு சீசாக்களில் நிரப்பி வைத்து விட்டு, அரிசியைப் பையோடு ஜன்னல் விளிம்பில் வைத்தாள். கால்களைக் கழுவிக்கொண்டு ஒரு கிழிந்த துணி கொண்டு கால் விரல்களைத் துடைத்து விட்டுக் கொண்டாள். அவன் நின்ற இடத்திலிருந்தே அவள் கால் விரல்களுக்கிடையில் சேற்றுப்புண் ரணமாகிப் போயிருப்பதைப் பார்க்க முடிந்தது.

அவள் கொடியில் உலர்த்தியிருந்த துணிகளை ஓரிடத்தில் விலக்கி விட்டு அங்கு அவன் சாப்பிடத் தட்டை வைத்தாள்.

அவன் சாப்பிட உட்கார்ந்தவன் உயரப் பார்த்தான். அவளுடைய ஜாக்கெட் பாடிகள்தாம் அவன் தலைக்கு மேல் இருந்தன. பழையதாகப் போனவை. கொக்கிகள் இழந்தவை.

அவள் ஒவ்வொரு முறை பரிமாறிய பிறகும்., உட்கார்ந்து கொண்டாள். ஒரேயடியாக நின்றுகொண்டு பரிமாறுவதைவிட இப்படி உட்கார்ந்து எழுந்து பரிமாறுவது மிகவும் சிரமமாகவே இருக்கும். ஆனால் நிற்பதே சகிக்க முடியாததால்தான் அவள் அப்படிச் செய்ய வேண்டும்.

அவன் அவளை மீண்டும் எழுந்திருக்கவிடாமல் அவனாகவே மோர் விட்டுக் கொண்டான். இரண்டே கவளத்தில் அனைத்துச் சாதத்தையும் வாயில் அடக்கி விட்டுத் தட்டுடன் எழுந்திருந்தான். தலையில் ஈரத்துணி தட்டுப்பட்டுத் தலையைக் குலுக்கிக் கொண்டான். அவன் தலையே மாறுபட்டது மாதிரி இருந்தது. அன்று காலையிலிருந்து முதல் தடவையாக அவள் முகத்தில் சிரிப்புத் தோன்றியது. சிரித்து விட்டாள்.

"ஏன்? என்ன?" என்றான்.

அவள் எழுந்திருக்க முயற்சி செய்தாள். 'வேண்டாம்' என்று அவன் சொல்லி விட்டுச் சுவரில் தொங்கிய சிறு கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். அவனுடைய தலைமயிரில் சிக்கிக் கொண்டு அவளுடைய இரு துணிகள் தொங்கின. அவள் துணி களைப் பிழியும்போது குத்திய கொக்கிகள் — அத்துணிகளில் இன்னும் விழுந்துவிடாமல் மீதம் இருக்கும் கொக்கிகள் — அவனுடைய தலை மயிரில் மாட்டிக் கொண்டிருந்தன.

மெதுவாக அவற்றைத் தலையிலிருந்து விடுவித்து மீண்டும் கொடியில் உலர்த்தினாள். அவன் ஆபீஸுக்குக் கிளம்பிப் போன பிறகு அவள் படுத்து விடுவாளோ என்ற சந்தேகம் திடீரென்று அவனுக்கு உதித்தது. அவளையும் சாப்பிடச் சொல்லி, அவள் சாப்பிட்டு முடித்த பிறகே ஆபீஸுக்குக் கிளம்பினான். அன்று அவன் காரியாலயத்தில் அநேகமாக எல்லாரும் வந்திருந்தார்கள்.

1985